# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Thursday, the 23rd March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS

*Panchayat Courts*

* 1011 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1958-ம் ஆண்டு பஞ்சாயத்துச் சட்டம் அமுலுக்கு வந்த இடங்களில் பஞ்சாயத்து கோர்ட்டு வேலைகளை நிறைவேற்ற என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Board of Revenue has been asked to take necessary steps to establish Village Courts under section 6 of the Madras Village Courts Act, 1888, and to create Courts of Village Munsifs under section 7 of the Act in the areas where Madras Panchayat Act, 1958 has come into force.

SRI S. M. ANNAMALAI : ரெவின்யூ போர்டு நடவடிக்கை எடுத்து அதற்குண்டான வேலைகள் செய்வதற்கு முன்னால் இப்பொழுது இந்தச் சட்டம் அமுலுக்கு வந்த இடங்களில் ரூ. 50, 100-க்கு உட்பட்ட சில வழக்குகளை முனிசீப் கோர்ட்டில் தாக்கல் செய்வதா அல்லது பஞ்சாயத்து கோர்ட்டில் தாக்கல் செய்வதா என்ற தகராறுகள் இருந்து கொண்டிருக்கின்றன. ஆகையினால் இதை விளக்கி அப்படிப்பட்ட வழக்குகள் எந்த கோர்ட்டில் பதிவு செய்யவேண்டுமென்று சர்க்கார் உத்தரவிடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதெல்லாம் பரிசீலிக்கப்பட்டு வேண்டிய உத்தரவுகள் பிறப்பிக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : இதற்கு முன் இந்த வழக்குகளை பஞ்சாயத்துகள் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுத்து வந்தது அரசாங்கத்திற்குத் திருப்தி அளிக்கவில்லையா ? எந்தக் காரணத்தினால் இந்தப் பஞ்சாயத்துக்களிடமிருந்து நீதி வழங்குதல் எடுக்கப்பட்டது என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுதுள்ள நிலையில் இந்தக் கேள்வியை இந்தச் சட்ட மன்றத்தினிடம் தான் போட வேண்டும். பஞ்சாயத்துகளுக்குள்ள இந்த அதிகாரத்தை எடுத்து விட வேண்டுமென்று இந்தச் சட்டமன்றம் ஒப்புக் கொண்டிருக்கிறது. இம்மாதிரி நீதியை நிர்வகிக்கிற பொறுப்பு தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்துகளுக்கு வேண்டாம் என்று அரசாங்கம் கருதியது. அந்தக் கருத்தை இந்த மன்றமும் ஏற்றுக் கொண்டு, அதன்படி சட்டம் நிறைவேற்றியிருக்கிறது.